உ

ஸ்ரீமீனாக்ஷி துணை.

# ஸ்ரீ சக்ர நித்ய பூஜா விதானம்

## சிறியது,





பரம்பரை, ஸ்ரீ வித்யோபாஸகர்,

**நா. நீலகண்ட சாஸ்திரி,**

ஸ்ரீ மீனாக்ஷி ஜோதிஷ கலா மந்திரம்,

No. 29, வடக்குச் சித்திரை வீதி, மதுரை,

# முன்னுரை.

ஸ்ரீ மீனாக்ஷி துணை.

புண்யசீலர்களே,

இவ்வுலகில், கர்மபூமியாகிய, இப்பாரத கண்டத்தில், பூர்வபுண்ய வசத்தால், நாம் அடைந்துள்ள மானிட பிறவி பயனாகிய, தர்மார்த்தகாம மோக்ஷங்களை எளிதில் அடைய, லோகமாதாவும், பராசக்தியுமான அன்னை ஸ்ரீ மஹாத்ரிபுர சுந்தரி தன்னை சரணமாக அடைந்துள்ள பக்தர்களுக்கு, எல்லாவிதமான ஸௌபாக்யங்களையும் அளிக்கிறேன் என்றும், மேலும், கருணைரூபிணியான இந்த பராசக்தி தான் ஸ்ரீசக்ரமத்யவர்த்தினியாக மதுரை மீனாக்ஷியின் பால வடிவத்தில், பக்தர்களுக்கு காக்ஷி கொடுத்து அவர்களின் அபீஷ்டத்தையும் உடனுக்குடன் நிவர்த்திசெய்தும், வருகிறாள். அம்பிகையின் குழந்தைகளான நாம் அனைவரும் அவளை அந்தரங்க பக்தியுடன், அவரவரின் சக்திக்கு தக்கபடி எப்படி பூஜித்தாலும் உபாஸித்தாலும் அவள் நம்மை கடைதேற்றுவாளென்றும், பக்திநிறைந்த அன்போடு செய்யும், பூஜை ஒன்றையே அவள் எதிர்பார்க்கிறாளே தவிர, பூஜாத்ரவ்யம், மந்திரம், கிரியாக்கூட்டம் இவைகளை பக்தியில்லாவிடில் கொஞ்சமும் ஏற்றுகொள்வதில்லை. மேலும், தன்னை நம்பியுள்ள பக்தர்களுக்கு, எல்லாவிதமான ஸௌபாக்யங்களையும், அம்பிகை மீனாக்ஷி நமக்கு கொடுக்க தயாராக இருக்கும் தாயாகையால் நாம் அவளிடம் ஒன்றையும் குறியாது அதிதிட பாவனையோடு, ஆராதனை செய்து வரவேண்டியது ஒன்றுதான் நமது கடமையாகும்.

'தேவி மீனாக்ஷியின் அருளால் வெளிவரும்' இந்தசிறு நூலினை அச்சிட நமக்கு பலவகையிலும் உதவிசெய்துள்ள தேவியின் பக்தர்களுக்கெல்லாம், அம்பிகை மீனாக்ஷி எல்லா விதமான ஸௌபாக்யங்களையும் கொடுக்க வேண்டிக்கொள்கிறேன்:

பரம்பரை,
ஸ்ரீ வித்யோபாஸகர்

நா. நீலகண்டசாஸ்திரி,
ஸ்ரீ மீனாக்ஷி ஜோதிஷ கலா மந்திரம்.
நிர் 29, வடக்குசித்திரைவீதி, மதுரை.

**ஸ்ரீ மீனாக்ஷி துணை.**

ஸ்ரீ சக்ரபூஜை நித்யப்படி செய்ய சாமான்கள்.

1. (பலகை) ஆஸனம் 2. தீபம் 3. புஷ்பம்மாலை 4. அக்ஷதை 5. சந்தனம் 6. ஊதுவத்தி (ஸாம்பிராணி) 7. சூடம் 8. தாம்பூலம் 9. நைவேத்யம் சக்திக்கும் காலத்திற்கும் ஏற்றவாறு தயார்செய்து கொண்டும் 10. மணி 11. கலசசொம்பு 12. சங்கபீடம் சங்கு 13. பஞ்சபாத்திரம் 14. அர்க்கிய கிண்ணி 15. தூபக்கால் 16. தீபக்கால் 17. கர்பூரத் தாம்பாளம் 18. புஷ்பத் தாம்பாளம் 19 அபிஷேக தீர்த்தபாத்திரம். இவைகளையெல்லாம் தயார் செய்து கொண்டு பூஜை ஆரம்பிக்கவும்.

---

**விசேஷ நாள்களில் அபிஷேகத்ரவ்யங்கள்.**

**1.** தைலம், **2.** பஞ்சகவ்யம், **3.** பஞ்சாமிருதம், **4.** நெய், **5.** பால், **6.** தயிர், **7.** தேன், **8.** கரும்புச்சார், **9.** இலுமிச்சம் பழசார், **10.** இளநீர், **11.** சந்தனம் இவைகளும் நைவேத்யத்திற்கு சுத்தான்னம் சக்கரைபொங்கல், பாயசம், வடை, தேங்காய் பழம், சித்ரான்ன வகையறுக்களும் சக்திக்கும், காலத்திற்கும் ஏற்றவாறு தயார் செய்து கொள்ளவும்.

---

## சக்ர விளக்க சுருக்கம்:

ஸ்ரீ மஹாத்ரிபுரசுந்தர்யை நம:

ஸ்ரீ வித்யாம் சிவவாமபாக நிலேயாம். ஹ்ரீம் கார மந்திரோஜ்வலாம், ஸ்ரீ சக்ராங்கித பிந்துமத்யவ ஸதிம், ஸ்ரீமத்ஸபா நாயிகாம் I, ஸ்ரீமந் ஷண்முக விக்னராஜ ஜனனீம், ஸ்ரீமத் ஜகன் மோஹினீம், மீனாக்ஷீம்ப்ரணதோஸ்மி ஸந்ததமஹம், காருண்ய வாராம் நிதிம்.

### I முதலாவது த்ரைலோக்ய மோஹன சக்ரம்.

இது நாற்சதுரமாய் மூன்றுப்ராகாரங்களோடு விளங்கும் இது முதலாவது ஆவரணமாகும். இதன் முதல் ரேகையில் பரதேவதையின் தேக காந்திகளேயே சரீரமாக தரித்துள்ள அணிமாதிகளான பத்துஸித்தி தேவதைகளும் இரண்டாவது ரேகையில் ப்ராஹ்மியாதி (அஷ்ட) எட்டு மாதாக்களும், மூன்ருவது ரேகையில் ஸர்வஸம்க்ஷோபிணீ முதலான பத்து முத்ராதேவதைகளும், வாஸம் செய்து கொண்டிருக்கிறார்ககள். இவர்களுக்கு ப்ரகடயோகினிகள் என்று பெயர். இவர்களுக்கெல்லாம் நாயகியாகிய த்ரிபுரை என்னும் சக்ரேச்வரி பேரானந்த்த்தோடு ரத்னஸிம் ஹாஸனத்தில் விளங்குவாள்.

### 2 ஸர்வாசாபரி பூரக சக்ரம்.

இது பதினாறு தளங்களுடைய கமலமாகும். இதில் காமாகர்ஷிண்யாதி 16 ஆகர்ஷிணீ தேவதைகள் வஸிக்கிறார்கள். இவர்களுக்கு குப்தயோகினிகள் என்று பெயர். இவர்களுக்கொல்லாம் நாயகியாகிய த்ரிபுரேசி என்னும் சக்ரேச்வரிதேவி மணிபீடத்தில் ஆனந்தமாய் விளங்கிக் கொண்டிருப்பாள்.

### 3 மூன்ருவது ஸர்வஸம் க்ஷோபண சக்ரம்.

இது 8 இதழ் பத்மம் இந்த தளங்களில் குப்த தா யோகினிகள் வசிக்கிருர்கள். அனங்ககுஸுமாதிகளான இந்த 8 சக்திகளும் பாசாங்குச, வரதாபய முத்ரைகளை தாங்கி ஸர்வாபரண பூஷிதர்களாய் ஒருமனப்பட்டவர்களாய் ஸ்ரீமஹாத்ரிபுர சுந்தரீத்யானத்தில் இருந்து கொண்டு விளங்குகிருர்கள். இவர்களுக்கெல்லாம் நாயகியாகிய த்ரிபுரசுந்தரீ யென்னும் சக்ரேச்வரி முன்னருள்ள ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பாள்.

### 4 ஸர்வஸௌபாக்யதாயக சக்ரம்.

இது 14 முக்கோணமுடையது. இதில் ஸர்வஸம் க்ஷோபிண்யாதி 14 ஸம்பிரதாயயோகினிகள் வசிப்பார்கள். இவர்களுக்கெல்லாம் அதிபதியாகிய த்ரிபுரவாஸினி யென்னும் சக்ரேச்வரி மணிமயமான ஆசனத்தில் அமர்ந்து விளங்குகிருள்.

### 5 ஸர்வார்த்தஸாதக சக்ரம்.

இது வெளியேயுள்ள 10 முக்கோணங்களையுடைய சக்ரமாகும் இக்கோணங்களில் ஸர்வஸித்திப்ரதாதிகளான 10 குளோத்தீர்ணயோகினிகள் வாசம் செய்கிருர்கள் இவர்களுக்கெல்லாம் ஈசையாய் த்ரிபுராஸ்ரீ என்னும் சக்ரேச்வரி பரிவாரதேவதைகள் போற்ற ஸ்வர்ணஸிம்ஹாஸனத்தில் அமர்திருப்பாள்.

### 6 ஸர்வரக்ஷாகர சக்ரம்.

இது உள் 10 முக்கோணமுடையது. இதில் வாசம் செய்யும் ஸர்வக்ஞாதிகளான 10 நிகர்பயோகினிகள் ஜபமாலை, புஸ்தகங்களை கையில் தாங்கி பச்சைகற்பூரம் போன்ற வெண்மையான திருமேனியையுடையவராய் விளங்குகிருர்கள்.

இவர்களுக்கெல்லாம் நாயகியாகிய த்ரிபுராமாலினி என்னும் சக்ரேச்வரீ ரத்னஸிம்ஹாஸனத்தில் ஆனந்தமாய் வீற்றிருக்கிறாள்.

### 7 ஸர்வரோகஹர சக்ரம்.

இந்த சக்ரம் எட்டு கோணங்களையுடையது. இதில் வசின்யாதி 8 ரஹஸ்யயோகினிகள் வசிக்கிறார்கள். இவர்களுக்கு நாயகியாகிய த்ரிபுராஸித்தாம்பாள் சக்ரேச்வரியானவள் மஹா பீடத்தில் வீற்றிருக்கிறாள்.

### 8 ஸர்வஸித்திப்ரதாயக சக்ரம்.

இது நடுவிலுள்ள முக்கோணமாகும். இந்த முக்கோணத்திற்கும் அஷ்ட கோணத்திற்கும் இடையில் வலது பாகத்திலும் இடது பாகத்திலும் மேல் பாகத்திலும் மூன்று நாற்கோணங்கள் உண்டு. இந்த நாற்கோணங்களில் எல்லா அஸ்திர தேவதைகளும் வசிக்கிறார்கள். இந்த முக்கோண வடிவமான அக்னிமயமான காமகிரி பீடத்தில் வாக்பீஜஸ்வரூபிணியும் காதிவித்யா ப்ரம்மாத்மக சக்தியுமாகிய மஹா காமேச்வரீ தேவியானவள் கந்த புஷ்ப மாலைகளுடன் ஸர்வாபரண ஆயுதங்களை தாங்கியவளாய் சதுரங்கஸேனைகளுடன் மித்ரேச, நாத, நவ யோனி சக்ர, ஆத்மதத்வ, ஸ்ருஷ்டி,கிருத்திய இச்சா சக்தியோடு விளங்குவாள். வலது சதுஷ் கோணத்தில் ஹாதிவித்யாரூபிணியாய் ஸூர்ய மண்டலமாகும் ஜாலந்தர பீடத்தில் ஞான சக்தி ஸ்வரூபிணியாய் ப்ரம்மாண்ட கோடிகளை சிருஷ்டிக்கவும் ஆற்றலுள்ளவளாய் விஷ்ணு சக்தியாய் ப்ரகாசிக்கும் மஹாவஜ்ரேச்வரீ மஹாவைபவத்துடன் வீற்றிருப்பாள். இடது சதுஷ் கோணத்தில் ஸாதி வித்யா ஸ்வரூபிணியாய் சந்திர மண்டலத்தில் க்ரியா சக்தி சக்தி பீஜஸ்வரூபிணியாய் பூர்ண சந்

திரனை யொத்த திருமேனியையுடையவளாய் மணிமயமான உடைகளையும் ஆபரணங்களையும் உடையவளாய் மஹாபகமாலினீ என்னும் தேவீ வீற்றிருப்பாள்.

### 9 ஸர்வானந்தமய சக்ரம்.

முக்கோணத்தின் மத்தியில் ப்ரஜ்ஞானஸ்வரூபமாயும் யோகிகளால் த்யானிக்தற்குரியதாயும் உள்ள பிந்து சக்ரத்தில் மாயாமயங்களாகிய கயிறுகளால் கட்டப்பட்ட கறுப்பு பட்டு திரையும், புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட பஞ்சப்ரும்ம மஹாமஞ்சமும், அதன்மேல் விரித்துள்ள பஞ்சுமெத்தையும் முப்பத்தாறுதத்வரூபமான படிகளும் ஸதாசிவ ரூபமான பட்டு தலையணைகளும் விளங்கியுள்ள மஞ்சத்தின்மேல் த்ரிலோக சுந்தரனும் காமேச்வரனுமான பரப்ரம்மம், ஸர்வாபரணவஸ்திர ஆயுதங்களுடனும் அழகிய மாதர் சாமரம் வீச இனிய வீணா கானம் செய்து கொண்டும் அநேக உபசாரங்களை செய்து கொண்டு சூழ்ந்து நிற்க மஹாவைபவத்தோடு அமர்ந்திருக்கும் காமேச்வருடைய இடது தொடையென்னும் மஹா பீடத்தின் மேல் த்ரிலோக மோஹினியும் சிருஷ்டியாதி பஞ்சகிருத்யங்களுக்கும் காரணமானவளும் சாந்தஸ்வரூபிணியும் சகல லோகமாதாவுமான ஸ்ரீமஹாத்ரிபுரசுந்தரியானவள் சிறந்த வஸ்திரபூஷண புஷ்பகந்தங்களால் அலங்கரிக்கப்பட்ட திருமேனியையுடையவளாய ஸமஸ்த சக்ர பரிவார ஸமேதயாய் ஸ்ரீவித்யாஸ்வரூபிணியாய் தேவிவிளங்குகிறாள். சுபம்.

யः சிவோ நாமரூபாப்யாம்.
யா தேவீ ஸர்வ மங்களா
தயோः ஸம்ஸ்மரணாத் பும்ஸாம்
ஸர்வ தோ ஜய மங்களம்.

உ

ஸ்ரீ மீனாக்ஷி துணை.

ஸ்ரீ மஹாத்ரிபுர சுந்தர்யை நம:

# ஸ்ரீ சக்ர பூஜா விதானம் சிறியது.

---

கர்த்தா ஸ்நானம் செய்து உலர்ந்த வஸ்திரம் தரித்துக் கொண்டு விபூதி அல்லது திருமண் வகையறுக்களை அவரவர்கள் அணிந்துகொள்ளும் முறைப்படி அணிந்துகொண்டு கை காலம்பி ஆசமனம் செய்து பூஜையை துடங்கவும்:

பூஜை அறையின் த்வாரத்தின் மேல் பாகத்தில் அக்ஷதயால் ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் பத்ரகாள்யை நம: என்றும் த்வாரத்தின் வலது பாகத்தில் ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் பைரவாய நம: என்றும் இடது பாகத்தில் ஓம் ஐம் ஹரீம் ஸ்ரீம் லம்போதராய நம: என்றும் பூஜை செய்து உள்ளே செல்லவேண்டும்.

## ஆஸனம்.

ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஆதாரசக்திகமலாஸனாய நம: என்று புஷ்பம் அக்ஷதை முதலியவற்றால் அர்ச்சித்து கிழக்கு அல்லது வடக்கு முகமாக உட்கார்ந்து கொள்ளவும். ப்ருத்வித்வயா த்ருதா லோகா தேவித்வம் விஷ்ணுநாத் ருதாத்வம்ச தாரய மாம்தேவி பவித்ராம் குருசாஸநம்

**மணி அடிக்கவும் குருவந்தனம் தீபமிடல்**

குரவெஸர்வலோகானாம் பிஷஜெபவரோகிணாம்: நிதயெஸர்வ வித்யானாம் தக்ஷிணாமூர்த்தயே நம: குருர் ப்ரம்மா குருர்விஷ்ணுர் குருர்தேவோ மஹேஶ்வர: குரு

ஸாக்ஷாத்பரம்ப்ரம்மதஸ்மை ஸ்ரீகுரவே நம: ஸ்வஸ்தி சிவாதி ஸ்ரீ குருப்யோ நம: என்று சிரஸில் இரண்டு கைகளாலும் (அஞ்சலி முத்ரையால்) தொழுது கொண்டும் ஓம் கம்கணபதயே நம: என்று நாபியின் கீழ்பாகத்திலும் ஓம் கும் குருப்யோ நம: என்று இடது தோள் பட்டையிலும், ஓம் கம்கணபதயெ நம: என்று வலது தோள்பட்டையிலும், ஓம் பம்பரமாத்மநெ நம: என்று ஹ்ருதயத்திலும் நமஸ்காரம் செய்து கொள்ளவும்.

**ஸங்கல்பம்.**

சிரஸில் இரண்டு கைகளாலும் குட்டி கொள்ளவும் சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் ப்ரஸன் வைத னம்த்யாயெத்ஸர்வவிக்நோபசாந்தயெப்ரணாயாமம்:

ஓம் பூ: ஓபுவ: ஓம்ஸுவ: ஓம் மஹ: ஓம் ஜன: ஓம்தப: ஓம் ஸத்யம்ஓம்தத்ஸவிதுரார்வரேணீயம்பர்கோகோதேவஸ்யதீமஹிதியோயோன: ப்ரசோதயாத் ஓமாப: ஜ்யோதீரஸ: அமிருதம் ப்ரம்ம பூர்ப்புவஸ்ஸுவரோம்.

**ஸங்கலம்**

வலது துடையின்மேல் இடது கை அடியிலும் வலது கை முகளிலுமாக வைத்து இரண்டு பெருவிரல்களாலுல் கை விரல்களை சேர்த்து பந்தனம் செய்து கொண்டு மம உபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீ மஹாத்ரிபுர சுந்தரீப் ரஸாதஸித்யர்த்தம் ஸ்ரீமஹாத்ரிபுர சுந்தரீப்ரசாதேன அநேக ஜன்மாந்தர கோட்யார் ஜித நிகிலதுரித சாந்தித்வாரா அஸ்மின் ஜன்மனிதர்மா ரர்த்த காம மோக்ஷ சதுர்வித பல புருஷார்த்தஸித்யர்த்தம் இஷ்ட காம்யார்த்த ஸித்யர்த்தம் விசிஷ்ய தேவீ சரணாரவிந்தயோ: அசஞ்சல நிஷ்கபட பக்திஸித்தியர்த்தம் யாவத்சக்தி த்யான ஆவாஹனாதி ஷோடசோப சாரபூஜாம்கரிஷ்யெ ததங்கம் கலச_சங்க ஆத்ம பீட பூஜா திகம் சகரிஷ்யெ.

த்ரையோக்ய சைதன்ய மயாதிதேவீ பவானிதுர்கே பவதாஞ்ஞயைவா ப்ராத: ஸமுத்தாய தவப்ரியார்த்தம் ஸம்ஸாரயாத்ராம் அனுவர்த்தயிஷ்யெ: ஆவாஹயாமித்வாம்தேவி ஸ்னர்த்தமிஹசுந்தரி எறிகங்கெ நமஸ்துப்பம் ஸர்நிர்த்தஸமங்விதெ கிருத்தர்த்தோனுக்ருஹீதோஸ்மிஸபலம் ஜீவிதம்மம ஆகதோதேவேசி சுபாகதமிதம்புன:

## ஆத்ம ரக்ஷா கர்த்தவ்யா

ஓம் ஹ்ர: அஸ்த்ராயபட் என்று சொல்லி அஸ்திர மந்திரத்தினல் வலது கையால் இடது உள்ளங்கை தலத்தையும், இடது கை தலத்தால் வலது உள்ளங்கை தலத்தையும் பிறகு வலது கையால் இடது கை பின்புறமும் வ்யாபகம் செய்து கொள்ளவும்.

பிறகு ஓம் ஹ்ர: என்ற அஸ்திர மந்திரத்தினல் இரண்டு கைகளாலும் தொழுது கொண்டு பூமியிலும், நடுவிலும் ஆகாசத்திலும் காண்பித்து கொண்டு மறுபடியும் ஈசானகோணமுதலாக எட்டுதிக்குகளிலும் ஆகாசத்திலும் பூமியிலும் சேர்த்து 10 திக்குகளிலும் அஸ்திரமந்திரத்தாலும் அஸ்திரமுத்ரையினலும் தன்னை ரக்ஷித்து கொண்டு ப்ராணயாமம்.

## தேஹ சுத்தி

(ப்ரணவம்) ஓம்காரம் 12 தடவை, ப்ராணயாமம் செய்து கொண்டு தனது தேஹத்தில் விராட் புருஷனைத்யானம் செய்து (மூலமந்திரம்) க-ஏ-ஈ-ள ஹ்ரீம் ஹ-ஸ-க-ஹ-ள ஹ்ரீம்: ஸ-க-ள ஹ்ரீம் என்று மூன்று தடவை மானஸிகமாக உச்சரித்து கொண்டு சிரஸ் முதலாக காலடி வரை மூன்று தடவை வ்யாபம் செய்து கொண்டு அக்ஷரந்யாஸம் செய்யவும்.

1 கம் நம: சிரஸ், 2 ஏம் நம: நாபி, 3 ஈம் நம: ஹ்ருத்யம், 4 ளம் நம: வலது கண், 5 ஹ்ரீம் நம: இடது கண், 6 ஹம் நம: நெற்றி, 7 ஸம் நம: வலது காது, 8 கம் நம: இடது காது, 9 ஹம் நம: முகம், 10 ளம் நம: வலது தோள்பட்டை, 11 ஹ்ரீம் நம: இடது தோள்பட்டை 12 ஸம் நம: பின்பாகம், 13 கம நம: அடிவயற்றின் வலது பாகம், 14 ளம் நம: 'அடிவயற்றின் இடது பாகம், 15 ஹ்ரீம் நம: ஹ்ருதயம்.

இந்த 15 இடங்களில் கையால் ந்யாஸம் செய்யவும்.

(வ்யாபகம்= தடவி கொள்ளுதல்)

**அங்கத்யாஸம் கரத்யாஸம்**

ஓம் அஸ்ய ஸ்ரீ மஹாத்ரிபுர சுந்தரீ மஹாமந்த்ரஸய ஆனந்த பைரவருஷி; சிரஸில் தேவீ காயத்ரீச்சத: உதட்டின் மேல் பாகத்தில் மஹாத்ரிபுர சுந்தரீ தேவதா ஹ்ராம் பீஜம் ஹ்ரீம் சக்தி: ஹ்ரூம் கீலகம் மார்பின் வலது பாகம் ஷெ இடதுபாகம் நடுமார்பில் தொடவும் ஸ்ரீமஹாத்ரிபுர சுந்தரீப்ரஸாத ஸித்யர்த்தெ ஜபெவிநியோக: 1 ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: ஸ்ரீமஹாத்ரி புரசுந்தரி ஹ்ராம் ஸர்வஞாயை அங்குஷ்டாப்யாம் நம: என்றும் ஆள்காட்டி விரலால் பெருவிரல் அடிமுதல் நுனிவரை ந்யாஸம் செய்யவும்.

2 ஓம் ஐம்*சுந்தரி= ஹ்ரீம், நித்யத்ருப்தாயை தர்ஜனீப்யாம் நம: ஆள் காட்டி விரலின் அடி முதல் அக்ரம் வரை பெருவிரலால் ந்யாஸம் செய்யவும்.

3 ஓம் ஐம்*சுந்தரி ஹ்ரூம் அனுதியோதாயை மத்யமாப்யாம் நம: நடுவிரல் அடிமுதல் நுனிவரை பெருவிரலால் ந்யாஸம் செய்யவும்.

4. ஓம் ஐம்†சுந்தரி ஹ்ரைம் ஸ்வதந்த்ராயை அனுமி காப்யாம் நம: மோதிரவிரலை பெருவிரலால் ந்யாஸம் செய்யவும்.

5 ஓம்†சுந்தரி ஹ்ரைம் அலுப்தசக்தயெ கனிஷ்டி காப்யாம் நம:

6. ஓம் ஐம்—சுந்தரி. ஹ்ர; அனந்தசக்தயெகரதல கரப்ருஷ்டாப்யாம்நம; இரண்டுகைகளின் உள்வெளி பாகங்கள் முழுதும் ந்யாஸம் செய்யவும்.

**முன்போல் ஷடங்கந்யாஸம்.**

1. ஓம் ஐம்† சுந்தரி † ஞாயை. (ஹ்ருதயாய நம; ஹ்ருதயத்தில். 2. ஓம்†நித்யத்ருப்தாயை சிரஸெஸ்வாஹா சிரஸிலும். 3. ஓம்† அனுதிபோதாயை சிகாயை வஷட் பின் சிகையிலும். 4.ஓம்,†ஸ்வதந்த்ராயை கவசாயஹும் இரண்டு கைகளாலும் கைமாற்றி தோள்பட்டையை தொட்டு சொள்ளவும். 5. ஓம், அலுப்தசக்தயெ, நேத்ரத்ரயாய வௌஷட் மூன்றுகண் கள். பவித்ர. நடு குண்டாணி விரல்களால் ந்யாஸம் செய்து கொள்ளவும்.

6. ஓம் † அனந்தசக்தயெ அஸ்திராயபட் என்று ஆள்காட்டி விரலால் அஸ்திர முத்ரைகாட்டி 10 திக்கிலும் பந்தனம்செய்து பூர்புவஸ்ஸுவரோமிதிதிக்பாத:

**த்யானம்**

பாலார்க்காயுத தேஜஸம் த்ரியநனும் ரக்தாம்பரோல்லாஸினீம் நாநாலங்கிருதி ராஜமான வபுஷம். பலோடுராட்சேகராம். ஹஸ்தைரிக்ஷுதனு: ஸ்ருணிம். ஸுமசரம் பாசம் முதாபி பரதீம். ஸ்ரீ சக்ரஸ்திதஸுந்தரீம்த்ரிஜகதாம் ஆதார பூதாம் ஸ்மரேத்.

---

† ஓம் முதல் சுந்தரி வரை.

### பஞ்சதத்வந்யாஸம்.

1. ஹௌம் நம: சிவாயை, சாந்திய தீதாயைஹ்ரு ல்லேகாயை நம: பெருவிரலால் சிரஸிலும்.

2. ஹ்ரையம் நம: சிவாயை சாந்தியை சகனயைநம: (ஆள்காட்டி விரலால் முகத்திலும்)

3. ஹ்ரூம் நம: சிவாயை வித்யாயை ரக்தாயை நம: நடு விரலால் ஹ்ருதயத்திலும்.

4. ஹ்வீம் நம: சிவாயைப்ரதிஷ்டாயை கராளிகாயை நம: என்று பவித்ர விரலால் நாபியிலும்.

5. ஹ்ளாம் நம: சிவாயை மஹோச்சுஷ்மாயை நம: இரண்டு கைகளின் சிறு விரல்களால், பாதங்களிலும், ந்யாஸம் செய்யவும்.

### (கலச பூஜை)

புஷ்பங்களை அர்ச்சிக்கவும். இந்திராயநம; யமாயநம; லருணயநம; கங்காயைநம; யமுனயை, நம; கோதாவர் யைநம; த்ரயஸ்த்ரிம்சத்கோடி தீர்த்தேப்யோநம; கலசஸ்ய, முகெவிஷ்ணு; கண்டேருத்ர; ஸமாச்ருத; மூலெதத்ரஸ்தி தோப்ரம்மாமத்யெ, மாத்ருகண. ஸ்ம்ருதா; குசெஷள துஸாகராஸர்வே, ஸப்தத்வீபாலஸுந்தரா. ருக்வேதோ தயஜுர்வேத; ஸாமவேதோப்யதர்வண; அங்கைச்சஸ ஹிதா; ஸர்வெ கலசாம்புஸமாச்ரிதா; கங்கேசயமுநேசை வகோ கோவரிஸரஸ்வதி. நர்மதெ ஸிந்து காவேரி ஜலெஸ்மின் ஸன்னிதிரும்குரு. ப்ரும்மாண்டோத்ர தீர்த்தானிகரை;ஸ்ப்ருஷ்ட்டானிதெரவெ தெனஸத்யேன மேதேவ, தீர்த்தம் தேஹிதிவாகர ஆவாஹயாமித்வாம் தேவீஸ்னர்த்தமிஹஸுந்தரி ஏஹிகங்கெ நமஸ்துப்யம் ஸர்வதீர்த்தஸமன்வி தெ க்ருதார்த்தோனுக்ருஹீதொஸ் மிஸபலம் ஜீவிதம். மம. ஆகதொதேவ தேவேசி. சுபாக மிதம்புன:

## சங்க பூஜை.

(ப்ரணவமந்திரத்தால்)ஓம்நம; என்றுசொல்லி சங்கத்தை வைக்கவேண்டிய இடத்தை சுத்தி செய்து ஹ்ர; என்ற அஸ்தரமந்திரத்தால் சங்கபீடத்தையும், சங்கையும் எடுத்து வைத்துக்கொண்டு ரம் வன்ஹி மண்டாலயநம; அம் ஸூர்ய மண்டலாயநம; என்று அர்ச்சித்து ஸர்வசைதன்யரூபாந் தாம் ஆத்யாம் வித்யாம்ச தீமஹி புத்திம்பான ப்ரசோதயாத் என்ற மந்திரத்தினுல் கலச ஜலத்தை பூரணம் செய்துகொண்டு அர்ச்சிக்கவும். சங்கமூலே, ப்ரம்மணேநம; சங்கமத்யே ஜனர்த்தனயநம; சங்காக்ரே சந்திரசேகராயநம; சங்கம் சந்திரார்க்கதைவத்யம். குக்ஷௌ வருணதைவதம்; ப்ருஷ்டேப்ரஜாதிச்சைவ, அக்ரேகங்கா சரஸ்வதித்ரை லோக்யேபானி தீர்த்தானி வாஸுதேவ ஸ்யசாஞ்ருயா வலது கையால், சங்கை மூடிக்கொண்டு ஆவாஹயாமித்வாம் தேவி ஸ்னுர்த்தமிஹஸுந்தரி ஏஹிகங்கே நமஸ்துப்யம் ஸர்வதீர்த்தஸமந்விதெ ப்ரம்மாண்டோதர தீர்த்தானி கரைஸ்பிருஷ்டானி தேரவே தேனஸத்யேனமே தேவ தீர்த்தம் தேஹிதிவாகர என்றமந்திரங்களால்கங்கயைஆதித்யநிடத்திலிருந்தும் ஆவாஹனம் பண்ணி பம்பத்மாய நம: பீடத்தின் மேல் சங்கை வைத்து ஜலகந்த புஷ்பங்களால் மூன்று தடவை ஓம் ஸ்ரீ மஹாத்ரிபுர சுந்தரிமூர்த்தயெ நம: என்று ஆவாஹன முத்ரை காண்பித்து மூலமந்திரத்தினுல் மூன்று தடவை அர்ச்சித்து தூப தீபங்கள் காண்பித்து ட்வம் அமிருதாத்மனு அமிருதம் நிவேதயாமி என்று நைவேத்ய முத்ரை (பெருவிரலால் மோதிர விரலை ந்யாஸம் செய்து) காட்டி இடது உள்ளங்கையில் சங்கை எடுத்து வைத்துக்கொண்டு மூலமந்திரம் மூன்று தடவை சொல்லி சங்க

தீர்த்தத்தை முக்கால் பாகமும் கலச தீர்த்தத்தில் சேர்த்து விட்டு பாக்கி சங்கிலுள்ள தீர்த்தத்தால் பூஜாவஸ்துக்களை யும் தன்னையும் ப்ரோக்ஷணம் செய்து கொண்டு சங்கில் கலச தீர்த்தத்தை நிறைய எடுத்து சங்கபீடத்தின் மேல் வைக்கவும்.

## ஆத்மா பூஜா

சந்தனத்தாலும் புஷ்பத்தாலும் தன்னை பூஜித்து கொள்ளவும், ஆத்மநே நம: அந்தராத்மநெ நம: ஞானாத்மநெ நம: பரமாத்மநெ நம: (மூலம்: க ஏ ஈ ள ஹ்ரீம் ஹ ஸ க ஹ ள ஹ்ரீம் ஸ க ள ஹ்ரீம்)

## பீட பூஜை

1. ஓம்கும் குருப்யோ நம: 2. ஓம்கம் கணபதயெநம: 3. ஓம் ஆதாரசக்தயெ நம: 4. ஓம் அனந்தாய நம: 5. ஓம் கல்பகவிருக்ஷாய நம: 6. ஓம் தர்மாய நம: 7. ஓம் அதர்மாய நம: 8. ஓம் ஸம்ஸத்வாய நம: 9. ஓம் ரம்ரஜஸெ நம: 10. ஓம் தம் தமஸெ நம: 11. ஓம் மம்மாயாயை நம: 12. ஓம் விம்வித்யாயை நம: 13. ஓம் பம் பத்மாயை நம: 14. ஓம் நவயோனிசக்ராய நம: 15. ஓம் மம் வன்ஹிமண்டலாய நம: 16. ஓம் அம் சூர்யமண்டலாய நம: 17. ஓம் உம் ஸோம மண்டலாய நம: 18. ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் கிளீவும் வியததிபதயெ பஞ்சவக்த்ராய ஸதா சிவாய மஹாப்ரேதபத்மாஸனாய நம:

இந்த மந்திரங்களால் பீடத்தில் அர்ச்சனை செய்து சங்கதீர்த்தத்தைப்ரோக்ஷணம் செய்து சந்தனத்தை தடவி தூபதீபங்கள் காண்பித்து மூலமந்திரத்தினால் ஒரு புஷ்பத்தை பீடத்தில் பூஜிக்கவும்.

## ஸ்ரீ சக்ரத்தில் அம்பிகையை கீழ் சொல்லுகிற மந்திரங்களால் ஆவாஹனம் செய்யவும்.

புஷ்பம், சந்தனம், அக்ஷதை, சங்க தீர்த்தம் இவைகளை இரண்டு கைகளிலும் சேர்த்து எடுத்துக்கொண்டு மூலாதாரத்திலிருந்து ஜீவ சைதன்யத்தை எடுத்து ஒரு ப்ரணவம் சொல்லிக்கொண்டு அந்த மூலாதார சைதன்யத்தின் ஒரு பாகத்தை வேறு பிரித்து ஸங்கல்பம் செய்துகொண்டு மறுபடியும் ஒரு பிரணவம் சொல்லிக்கொண்டு அந்த சைதன்யம் சுஷும்ன மார்க்கமாக மேல் பாகத்திற்கு வந்து விட்டதாக பாவனை செய்துகொண்டு ஹ்ருதயத்தில் இரண்டு கைகளையும் காண்பித்துக் கொண்டு மஹாபத்ம வனாந்தஸ்தே காரணாந்த விக்ரஹே ஸர்வபூதஹிதே மாத: எஹ்யேஹி பரமேச்வரி என்று ஸ்துதி சொல்லிக்கொண்டு மறுபடியும் ப்ரணவம் சொல்லிக்கொண்டு த்வாதசாரபத்மம் வரை கைகளை கொண்டுபோய் மூலமந்திரம் மூன்று தடவை சொல்லி மறுபடியும் கைகளை மூலாதாரபர்யந்தம் கொண்டு போய் ஆகச்ச ஆகச்ச என்று சொல்லிக்கொண்டு வலது பாகமாக இரண்டு கைகளையும் வலது மூக்கின் ஸமீபம் கொண்டு வந்து இடது மூக்கை அடைத்து வலது மூக்கின் வழியாக ச்வாஸத்தையும் சேர்த்து (ஓம்) என்ற ப்ரணவம் சொல்லி ஸ்ரீமஹாத்ரிபுரசுந்தரியை ஸ்ரீசக்ரத்தின்மேல் ஆவாஹிக்கவும் (ஓமாவாஹயாமி ஆவாஹன முத்ரை காண்பித்து இரண்டு கைகளையும் நெருக்கமாக மலத்தி வைத்துக் கொண்டு பெருவிரலால்மோதிரவிரலின் அடிப்பாகத்தை தொட்டுக்கொண்டு (ஓம்) ஆவாஹிதாபவ என்றும் இரண்டு கைகளையும் கமுத்தி விரல்களை மூடிக்கொண்டும் பெருவிரல் இரண்டையும் கீழ் முகமாக இளகாமல் சேர்த்து வைத்துக்கொண்டு (ஸம்ஸ்

தாபன முத்ரை) காண்பித்து (ஓம் ஸம்ஸ்தாபிதாபவ) என்றும் இரண்டுகைகளின் விரல்களையும் மடக்கி பெருவிரலைமேல் பாகத்தில் உயர்த்தி இரண்டு கைகளையும் ஒன்றுக்கொன்று தொடாமல் விடர்த்திக்கொண்டு (ஸன்னிதாபிதாபவ) என்றும் இரண்டு பெருவிரல்களையும் கீழ் முகமாக உள்ளங்கையில் மற்ற விரல்களால் மடக்கி பிடித்து முஷ்டியாக்கி (நிரோதன) முத்ரை காண்பித்து ஸன்னிருத்தாபவ என்றும் இரண்டு கைகளையும் சரித்து பிடித்துக்கொண்டு பெருவிரலை மேலுக்கு உயர்த்தி இரண்டு கைகளையும் சேர்த்து (ப்ரஸாதன) முத்ரை காட்டி ஸான்னித்யம் குரு குரு என்றும் ப்ரஸீத ப்ரஸீத என்றும் சொல்லவும்.

பிறகு இரண்டு கைகளிலும் சந்தனத்தை தடவிக் கொண்டு (மூலமந்திரத்தால்) மூன்று தடவை தேவியின் எல்லா அவயவங்களிலும் தடவிக்கொண்டு (மூலாக்ஷர ந்யாஸம்) (ருஷிசந்தஸ்) (த்யானச்லோகம்) இவைகளை சொல்லி புஷ்பத்தை ஆராதித்து ஆஸனமிதம் ஸ்வாகதமஸ்து என்று சொல்லி சங்கை கையில் எடுத்துக்கொண்டு பாத்யமிதம் அர்கியமிதம் ஆசமனீயமிதம் மதுபர்க்கமிதம் புனராசமநீயமிதம் (ஸ்னானமிதம்) ஆபோஹிஷ்டாமயோபுவ: என்ற மந்திரங்களால் ப்ரோக்ஷணமும் ருத்ரம் ஸ்ரீஸூக்தம், துர்க்காஸூக்தம், புருஷஸூக்தம் முதலான மந்திரங்களை கால தேசத்திற்கு தகுந்தபடி செய்து கொண்டு புனஸ்னானமிதம் வஸ்திரமிதம், கஞ்சுகமிதம், பூஷணமிதம், கந்தமிதம், ஹரித்ராசூர்ணமிதம், நேத்ராஞ்சனமிதம், மாங்கல்யமிதம், கண்டாபரணமிதம், ஸமஸ்தஅங்காபரணானிசஸமர்ப்யாமி புஷ்பமாலாம்ஸமர்பயாமி, ஸர்வபூஷணெப்யோ நம: ஐம் வராயை ஸ்ரீகுருபாதபங்க்தியை நம: க்லீம் பராயை ஸ்ரீகுரு

பா த பங்க்தியை நம: ஸௌ: அபராயை ஸ்ரீ குருபாத பங்க்தியை நம: மேல் **அங்காவரணம்** முன் சொல்லியுள்ள அங்கந்யாஸங்களை ஒருதடவை சொல்லிக்கொண்டு அர்ச்சித்து அஸதிர மந்திரத்தால் 4தடவை அர்ச்சிக்கவும் த்ராம் த்ராவிணீபாணாய நம: ஸ்ரீம் ஆகர்ஷணபாணாய நம: ப்ளூம் வசிகாணபாணாய நம: ஸம் ஸம் மோஹனபாணாய நம: கூபகாயை நம: பகாயை நம: பஸர்பிண்யைநம: பகமாலிந்யை நம: அநங்காயை நம: அநங்கமேகலாயை நம: வ்யோம் ப்ரம்மாண்யை நம: மம் மாஹேச்வர்யை நம: மோம்கௌமார்யை நம: ஹைம்வைஷ்ணவ்யை நம: ஹோம் வாராஹ்யை நம: ஹோம் இந்திராண்யை நம: ஹம் சாமுடயை நம: ஓம் சண்டிகாயை நம: அஸிதாங்க பைரவாய நம: ருரு பைரவாய நம: சண்டபைரவாய நம: க்ரோதபைரவா நம: உன்மத்த பைரவாய நம: கபாலி பைரவாய நம: பீஷ்ம பைரவாய நம: ஸம்ஹார பைரவாய நம: இந்திராயஸுராதிபதயெ நம: அக்னயெதேஜோதி பதயெ நம: யமாயப்ரேதாதி பதயெ நம: நிருருதயெ ராக்ஷாதி பதயெ நம: வருணாய ஜலாதி பதயெ நம: வாயவெப்ராணாதி பதயெ நம: ஸோமாய நக்ஷத்ராதி பதயெ நம: ஈசாணாய வித்யாதி பதயெ நம: ப்ரம்மணெலோகாதி பதயெ நம: அனந்தாய நாகாதி பதயெ நம: ஓம் வஜ்ராய நம: ஓம் சக்தயெ நம: ஓம் தண்டாய நம: ஓம் கட்காய நம: ஓம் பாசாய நம: ஓம் அங்குசாய நம: ஓம் கதாய நம: ஓம் த்ரி சூலாய நம: ஓம் சக்ராய நம: ஓம் பத்மாய நம: ஓம் புஷ்பதாரிண்யை நம: இந்த ப்ரகாரம் ஜலாதி ஜலாந்தம் **1** ஜல, **2** கந்த, **3** புஷப, **4** தூப, **5** தீப, **6** ஜலாந்தம் பூஜை செய்யவும்.

---

N. B:- அர்ச்சனை சொல்லும் போது (ஓம்) என்று இல்லாத இடங்களில் சேர்த்து கொள்ளவும்.

மேல் கொண்டு முன்பாகத்தில் சுத்தம் செய்த இடத்தில் ம என்று பவித்ர விரலால் எழுதி சந்தன புஷ்பங்களால் அந்த இடத்தை அலங்கரித்து நிவேத்யம் அதன் மேல் வைத்து காயத்ரியால் **அபிகாரம்** செய்து முக பூஜை தடங்கவும்.

## நைவேத்யம்

சங்க ஜலத்தை வலது கையில் எடுத்துக் கொண்டு இடது கையால் வலது கையை மூடிக்கொண்டு (எட்டு) தடவை (ஓம்) என்னும் ப்ரணவம் ஜபம் செய்து (ஓம் பட்) என்று சொல்லி நிவேதன பதார்த்தங்களில ப்ரோக்ஷணம் செய்து (ரக்ஷை செய்து) மறுபடியும் ஜலமெடுத்து கொண்டு யம் என்று எட்டு தடவை ஜபம் செய்து (நம:) என்று சொல்லி ப்ரோக்ஷித்து வலது கையில் (ரம்) என்றும் இடது கையில் (வம்) என்றும் எழுதி வலது கை அடியிலும் இடது கை மேலிலுமாக நிவேதனத்தில் காண்பித்து மோதிர விரலால் நிவேதனம் தொட்டுக் கொண்டு எட்டு தடவை மூல மந்திரம் ஜபம் செய்து கையை சுத்தி செய்து கொண்டு (ட்வம்) அம்ருதீபவ என்று சொல்லி (சுரபி முத்ரை) காண்பித்து (மூல மந்திரத்தால்) ஜலகந்த புஷ்ப தூப தீப ஜலாந்தம் அர்ச்சனை செய்து ஸத்யம் த்வர்த்தேனபரிஷிஞாமி என்று சொல்லி பரிஷேசனம் செய்து கொண்டு அமிருதோபஸ்தரணமஸி.

## பஞ்சப்ராணாஹுதி

1. ப்ராணாய ஸ்வாஹா—சிறு விரலும் மோதிர விரலும், பெருவிரலும் சேர்த்து. 2. அபானாய ஸ்வாஹா—

நடுவிரல், ஆள்காட்டி விரலும், பெருவிரலும் கூடி. 3 வ்யானய ஸ்வாஹா—மோதிர விரலும், நடுவிரலும், பெரு விரலும். 4. உதானய ஸ்வாஹா—சிறு விரலில்லாமல் மற்றெல்லா விரல்களும். 5. ஸமானய ஸ்வாஹா—ஐந்து விரல்களையும் ஒன்று சேர்த்து. 6. மூல மந்திரத்தினலும் ப்ரணவ மந்திரத்திரத்தினலும் ஒரு ப்ராணஹுதி செய்து கை சுத்தம் செய்து கொண்டு ஒரு புஷ்பம் எடுத்து மஹாத்ரி புர சுந்தர்யை நம; என்று சொல்லி ஆராதித்து மானஸ பூஜை செய்து தேவியேயும் நிவேதனத்தையும் சேர்த்து ரக்ஷித்து சந்தஸ் சொல்லி 8 தடவை மூலம் ஜபம் செய்து மறுபடியும் சந்தஸ் சொல்லவும். பிறகு மூலத்தினல் பூ ஆராதித்து அமிருத பானீயமிதம் மறுபடியும் ஒரு பூ ஆரா தித்து அமிருதா பிதானமஸி பிறகு பீடத்திலிருந்து ஓர் புஷ்பம் எடுத்து நைவேத்யத்தில் போட்டு புஷ்பதாரிண்யை நம: என்று சொல்லி வடக்கு முகமாக ஆராதித்து அமி ருதோபஸ்தாரணமஸி வடக்கு முகத்தில் ப்ராணஹுதி அமிருதா பிதானமஸி மறுமுறையும் பீடத்திலிருந்தும் ஓர் புஷ்பம் எடுத்து ஓம் புஷ்பதாரிண்யை நம: என்று வடக்கு திக்கில் ஆராதித்து கை சுத்தி செய்து கொண்டு கண்டூஷமி தம் மூன்று தடவை, 2 தடவை தந்த தாவனமிதம், 3 புனர் கண்டூஷமிதம் 4 ஜிஹ்வா சோதனதுதம் 5 புனர் கண்டூஷ மிதம் 6 கரசோதனமிதம் 7 புனர் கண்டூஷமிதம் 8 முக சோதனமிதம் 9 பாத்யமிதம் 10 அர்க்யமிதம் 11 ஆசமநீய மிதம் என்று அர்க்யம் கொடுக்கவும்.

பழம் வடை வகையரு தாம்பூலம் முதலான வகை களை நிவேதனம் செய்து கண்டூஷாதி அர்க்யம் கொடுத்து மூல மந்திரத்தால் ஜலாதி ஜலாந்தம் சர்ச்சனை செய்து சங்கெடுத்து ஸர்வம் மஹா நைவேத்யம் நிவேதயாமி.

ஸஹஸ்ரநாமம் அஷ்டடோத்தரம் த்ரிசதி அர்ச்சனை கள் செய்யவும்.

## கர்பூர ஹாரத்தி

நீராஜனம் மஹா பாகெ நிர்மலம் ஸ்வப்ரகாசகம் அஹம் பக்ததியா ப்ரதாஸ்யாமி ஸ்வீகுருஷ் வதயாநிதெ ஸ்ரீமஹா த்ரிபுரஸுந்தயை நம: கர்பூர நீராஜனம் தர்சயாமி மந்திர புஷ்பம் ஸர்பயாமி சுவர்ண புஷ்பம் ஸமர்பயாமி சத்ரம் ஸமர்பயாமி சாமரம் வீஜயாமி ந்ருத்யம் தர்சயாமி கிதம்ச்ராவயாமி யஸ்யஞ்யா ஜகஸ்ரஷ்ட விரிஞ்ச: பால கோஹரி: ஸம்ஹர்த்தா காலருத்ராக்ய: நமஸ்தஸ்னமபி நாகிநெ புண்டரீக புரமத்ய வாஸினீம் நர்த்தாராஜ ஸஹதர் மசாரிணீம் அத்ரிராஜதநயாம்திநே திநெ சிந்தயாமி சிவ காமசுந்தரீம் ஸமஸ்தராஜொபசார பக்தியுபசார சக்தியுப சார பூஜா: ஸமர்பயாமி ஆஹாஹனம் நஜாநாமி நஜாநாமி விஸர்ஜம் பூஜாவிதிம் நஜாநாமி க்ஷமஸ்வபரமேச்வரி மந்திர ஹீனம் க்ரியாஹீனம் பக்திஹீனம் சுரேச்வரி யத்பூஜிதம் மயாதேவி பரிபூர்ணம் தத்ஸ்துதே அபராத சதம் க்ருத்வா ஜகதம் பேதியோச்சரேத் யாம்கதிம் ஸமவாப்நோதி நதாம் ப்ரம்மாதய: ஸுரா: ஸாபராதோஸ்மி சரணம் ப்ரா ப்தஸ்த்வாம் ஜகதம்பிகெ இதாநீமனுகம்ப்யோ ஹம்யதெச் சஸிததாகுரு அஞ்ஞாநாத் விஸ்மிருதோப்ராந்தியாயன்யூனம் அதிகம்கிருதம் தத்ஸர்வம் க்ஷம்யதாம் தேவி ப்ரஸீதபரமேச் வரி காமேச்வரி ஜகன்மாத: ஸச்சிதானந்தவிக்ரஹெ க்ரு ஹாணார்ச்சாமிமாம் ப்ரீத்யா ப்ரஸீதபரமேச்வரி குஹ்ய யாதி குஹ்யகோப்த்ரீத்வம் க்ருஹாணாஸ் மத் க்ருதம் ஜபம் ஸித்திர் பவதுமேதேவித்வத்ப்ரஸாத் சுரேச்வரி.

## ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ மந்திர மஹிமை.

யஸ்ய நோ பச்சிமம் ஜன்ம யதிவா சங்கரஸ்வயம் தேனைவலப்யதே வித்யா ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ.

யாருக்கு புனர் ஜன்மமில்லையோ, அல்லது யார் ஸ்வயமாகவே, சங்கரஸ்வரூபமாக இருக்கிறார்களோ. அவர்களால்தான் ப்ரம்ம வித்யையாகும் ஸ்ரீமத் பஞ்ச தசாக்ஷரி அடையப்படுவதாகும். மோக்ஷத்தை அடைவதற்கு சிறந்த ஸாதனம் ஸ்ரீவித்யையாகும். இதில் ஸந்தேஹம் இல்லை.

சில்பம், ஸங்கீதம் முதலியவற்றின் ஞானத்தை உடையவன் வித்வான் என்று கருதப்படுவதில்லை. ஆத்மப்ரம்மைக்ய ஞானியே வித்வானாவான். ஆகலின் எல்லா துக்கங்களும் நீங்கி அமிர்த சுகமாகிற (மோக்ஷத்தை அடைவதற்கு ஸ்ரீ வித்யோபாஸனைதான் காரணமே தவிர வேறில்லை. இதில் கிஞ்சிற்றும் ஸந்தேஹம் இல்லை.

### அதிகாரிகள்.

பாப எண்ணங்களோடு கூடிய கல்மஷசித்தத்தையுடையவர்களும் பரிசுத்தமான சித்தத்தையுடையவர்களும் செல்வம் வித்வத்தன்மை - ஸாமர்த்தியம் - முதலியவற்றை பெற்ற புண்யவான்களும் ஸ்ரீ வித்யோபாஸனையில் அதிகாரம் ஒருபோல் உள்ளவர்கள் என்று வேதம் சொல்லுவதால் இதில் அதிகாரம் எல்லோருக்கும் உண்டு என்று ஏற்படுகிறது.

எளிதில் - பரதேவதையின் கிருபையால் தர்மார்த்தகாமங்களையும் அடைந்து இந்த ஜன்மத்திலே மறுபிறப்பில்லாத மோக்ஷத்தையும் அடைய வேறுவழி இல்லை என்று ஹயக்ரீவர் அகஸ்தியருக்கு எடுத்து சொல்கிறார்.

சுபம்.